மாதாதா மாமுறைவாழ் மாவணிகா மாமனேமே
தாதாநீ ராமநா தா. (சா)

ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்செட்டியார் அவர்கள் பேரில் சொல்லிக்கொண்ட
வேண்டுகோள் கவி.

* சுபகுணக ணங்கள்நிறை தருசினைய நண்பனருள் சுதனிலகு சண்முகமெ னும், விபவமுள சுந்தரனை யனுதினநி னைந்துதுதி விபுத கவி வேதியனை நீ, யிபமுனம கிழ்ந்துவரு பசியமுகில் சுந்தரனு மிவனெனவு கந்துபுவி யோர், சபதமிடு கின்றபடி நினைவுகள்தெ ரிந்துதவு தருணமிது கண்டுகொள்க வே. (எ)

* முறையூரென்னும் வளம்பதியில் முகிலாய் வளர்சின் னயவணிகன், முதிருந் தவத்தின் பலன்றனே முதன்மைப் புதல்வ னுகி வந்தோன்; தறையோர் புகழிச் சண்முகவேள் தயவுக் கிசைந்தா யடிமகளே, சரசம் புரிந்து நயம்பேசிச் சந்தக் களபங் கற்பூரம்; நிறையே யகலப் பூசிமலர் வேய்ந்து வெள்வெற் றிலைதுவர்க்காய், விரைந்து கொடுத்துக் குளிர்மகர வீணை வர்ணங் களைமீட்டிக்; குறைவு தீர்க்குங் கற்பகத்திற் கூறும் வல்லி ஜாதமெனக், குன்று மிரண்டு புயங்களெனுங் கொழுகொம் பேறி வாழ்வாயே. (அ)

இதுவும் ஷை பிரபு அவர்கள் பேரில் மனை வேண்டுமென்று
சொல்லிய சூரிகாபந்தக் கவி.

* மன்னு திருமக ளார்வணி காமணி யேதுதிமா
தென்னு கவிக்கு மகிழ்நிதி யேசெழுங் காருலவும்
பொன்னு கதிக்கும் மதனூ மாமுறைக் கண்ணிலகு
கன்னு மதிமனை தாதாநி சண்முக காநிதியே. (கூ)

முறையூர் பழ. ராம. பிரபு அவர்களின் குமாரராகிய மகா-ள-ள-ஸ்ரீ
கருப்பன் செட்டியாராகிய சேதுசெட்டியாரவர்கள் பேரில் சொல்லிய

சதுரங்கபந்தக்கவி.

* தக்கபுக ழீர்முறைசை தன்னில் வணிகமணி
மிக்கமா மேரு வியப்பறிந்தோன்—ஒக்க
வருதபனச் சேயாகு மாராம சாமி
தருசேது பூமணிவன் றன். (கo)

ஷை யார் பேரில் ரதபந்தக்கவி.

* காணிமுறை சைக்கரசே காங்கயன்னே ராய்சமுகங்
காணில்வன சைப்பதிமாக் கற்பகமும்—நாணியுறும்
நன்னயவா னேகனகன் ராமநா தன்பெற்ற
கன்னு கருப்பவணி கா. (கக)

ஷெயார் நற்சமயத்தில் பால் பசு கொடுத்ததற்கு சொல்லிய கவி.

* மீனவனார் முறைசைநக ரத்தில் மேவி விளங்குவணி கோத்த மரில் விஜயன் னேராம், தானகர்ன னெனும்ராம நாத வள்ளல் தவசு தனம் மால்கருப்பன் செட்டி பூமான், மானபரன் பாலகிருஷ்ண கவிக்கின் றுளில் வசிஷ்டசுர பிக்கிமே லென வழுத்த, வானவர்கோ னகமகிழத் தந்துசிந்தா மணியெனவே வாழ்வுற்று வளர்கின் றனே

ஆகச்செய்யுள் ௯௮௦௯.

---

## பீமகவி.

இவர் பாண்டி நாட்டில் குன்றக்குடி யென்னும் ஸ்தலத்தருகேயுள்ள செந்நெற்குடி யென்னும் ஊரிற் பிறந்தவர். திருவாவடுதுறை ஆதீனம் சின்ன சந்நிதானம் ஸ்ரீமத் நமச்சிவாயதேசிக சுவாமிகளிடம் கல்விகற்றவர். வால நைடதம், சிவபுரமான்மியம், சிவபுரம் மீனும்பிகை பிள்ளைத்தமிழ், செந்நெற்குடி சண்முகநாதன் பிள்ளைத்தமிழ், கோட்டிமாதவன்பிள்ளைத்தமிழ், காரிகைவெண்பா, விஜயசிந்தாமணி இவர் செய்த நூல்கள். வயது (௫௦). ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ் செட்டியாரவர்களா லபிமானிக்கப்பெற்ற வித்துவான்களி லிவருமொருவர்.

முறையூர் ஸ்ரீமாந். பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள் மீது கூறியன.

* பூமலிந் தோங்கும் பொழில்களுந் தடங்களும்
நந்தன வனங்களு நந்தா வளத்தொடு
சீர்சார்ந் திலங்குஞ் செல்வமா நகராம்
முறைமுறை யூரின் முடிபெறு வேந்தே
மறுவிகந் தொளிரு மாமதி யென்னத்
திருவிருந் தருள்செய் திகழ்முக முகிலே
அளிநின் றுலவு மணிமரை மலரென
வளிநின் றுலவு மம்பக நிதியே
அண்டரு முனிவரு மண்டரிற் றேன்றிய
வண்டுறை கரத்து மாமகள் கணவனுங்
கூடிக் குடக்கார் கோள்கடைந் திடுநா
ளீடிலா துவந்த வினிய வமுதுநற்
கண்டும் பாகுங் கரும்பி னிரதமும்
விண்டுதே னொழுகும் விளைமுக் கனியுந்
தன்சொல் லாக்கிய தகைக்கொரு கடலே
பன்மொழி யார்க்கும் பாவைய ரணைக்குஞ்
சண்முகக் கோவே சார்ந்தவர்க் கமுதமே
யங்க நாம மமைமுறை நான்கிற்
பூதலந் தன்னிற் புகழ்முப் பாலரின்
முதற்பா லார்க்கு முதன்மைய தாகுநின்

னொப்பிலா நாம மூவந்துநிலை நிறுத்திய
மூன்று மங்க மத்துகை யாக
மங்களந் தனக்கோர் வளர்நீ யிதுவென
மகிழ்வொடு பெற்றனன் வாழிநின் புகழே. (க)

மற்றோர் காலத்தில் கூறியது.

* அன்ன முதவி யருளுதவி யாடைதந்து
சொன்ன முதவிச் சுகமுதவும்—பொன்னும்
முறையூர் நிதிசண் முகக்கோவைக் கண்டு
முறைசெய்த நாளே முதிது. (உ)

* பொன்னொடு புகழும் புயங்கமார் மணியும்
எக்கா லத்தினு மினிமையி னமரும்
பெருகுடி வந்தென் னிருகண் ணுயமர்
முறைசையம் பதிவாழ் முதல்வனும்
சண்முக முதலே தனிப்பெரு முதலே
வீம கவியான் விளம்புவ தொன்று
இதுவே காக்கு மமைய மாதலின்
இக்கவி தருவோர்க் கின்புடன்
பக்ஷமொன் றொன்றே யருள்வையென் பொருட்டே. (ங)

ஷை பிரபு அவர்களைக் கண்டபோது பாடியன.

வெண்பாக்கள்.

* வீடெல்லாம் பொன்னாகும் வீதியெலாம் நெற்குவைகள்
நாடெல்லாங் கீர்த்தி நவிலக்கேள்—ஆடவர்தங்
கண்ணுன் கொடையதனிற் கற்பகமே யொப்பாவான்
வண்முறைசைச் சண்முகபூ மான். (ச)

* பொன்பெற்று ரிற்பெரியோன் பூவுற்று ரிற்புகழோன்
மின்பெற்று ரிற்சிறந்த மேன்மையோன்—அன்புற்றே
எண்ணுமது ரத்தமிழி லேபுகழை யுற்றவனும்
வண்முறைசைச் சண்முகபூ மான். (ரு)

* விண்ணினிடை மேன்மையுற வேண்டின் மயிலேறு
சண்முகனை வாழ்த்தித் தயையுறுமின்—நண்ணுமன
மெண்ணியசெம் பொன்வேண் டிகம்வேண்டின் வண்முறைசைச்
சண்முகனை வாழ்த்திடுமின் முன். (சா)

* தண்டமிழின் மிக்கோன் சதுரன் வடமொழியைக்
கண்டு களிக்குங் கருத்துளோன்—தண்டமிழோர்
எண்ணமெலாஞ் சிந்தாம லேநிறைவேற் றுங்கொடையான்
வண்முறைசைச் சண்முகபூ மான். (எ)

✻ கல்லார்க்குக் கற்பிப்போன் காசொன் றும் கைவசமே
இல்லாரை யிந்திரன்போ லேசெய்வோன்—வல்லாய்கேள்
காமுறையூர் கையான் கமலத் திருக்கண்ணன்
மாமுறைசைச் சண்முகபூ மான். (அ)

நிமிஷகவிவேம்பத்தூர் பிச்சுபாரதிகள் நீர் உண்டவகையும் இடமும் ஒருவெண்பாவால் சொல்லுமின் என்றபோது சொல்லியது.

✻ கதலிக்கா யின்கறியுங் கத்தரிக்காய்க் கூட்டும்
பதமான மாவடுவும் பாங்காய்—இதமாகும்
நுண்மையொடு முண்டோம்பொன் நூலுணர்வார் வாழ்முறைசைச்
சண்முகனார் சத்திரத்திற் றான். (கூ)

சிலகவிஞர்கள் கூடி இக்காலம் பிரபுக்களில்லை அக்காலம் வடமொழிக்குக் கொடுத்தான் போஜன் தென்மொழிக்குக் கொடுத்தான் குமணனென்ற போது பாடியது.

✻ வனப்புறு வடசொற் கவிச்சுவை யுணர்ந்து வழங்குவான் போஜனு மென்றும், இனிப்புறு தென்சொற் கவிக்குநற் குமணன் எண்பொரு ளீகுவா னென்றும், தனித்தமிழ்ப் புலவர் வடமொழிப் புலவர் சாற்றுவர் தண்பொழின் முறைசை, வனிதைய ரிணையும் சண்முக முதல்வன் மாணவை கண்டவர் மதியார். (க0)

செவ்வூர் வித்வான்கள் சிலபேர்கூடி மிடியாலுநொந்து இக்காலம் தாதாக்களில்லை யென்று வருந்தும் போது சொல்லியன.

✻ தண்டமிழ்ப் புலவீர் முறைசைமா நகரிற் சார்ந்திடு சண்முக வள்ளல், அண்டர்வண் டருவின் அம்சமாம் விரல்கொள் அய்யனை அருந்தமிழ் வைப்பைக், கண்டபோ துமது மிடிகட லேகுங் கவிமழை பொழிந்திடின் மற்றும், எண்டரு பெருமை யுரைப்பதற் கென்னு வேகமே யிடரிலே யெழுவீர். (கக)

✻ மற்றுமம் முதல்வன் வதியவை தனக்கோர் வண்குறி வழுத்துவன் கேண்மின், பொற்றொடி மகளி ரொருபுறம் நடிப்பர் புங்கவர் வாழ்த்தொரு புறமாம், கற்றவர் கவிக ளொருபுற மொலிக்கும் கானமே யொருபுறங் கலிக்கும், மற்றவர்க் கீயு நிதியொலி யொருபால் மன்னிடு மறிந்துசென் றிடுமே. (கஉ)

ஆகச்செய்யுள் ருகூஅகரு.

---

தனிச்செய்யுட்சிந்தாமணி

முதற்பாகம் முற்றிற்று.